# திருப்பெருந்துறை

(1964)

(தலயாத்திரை)



திருவாவடுதுறை ஆதீனம்

வெளியீடு எண் 194.



உ

இது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

ஆணையின்வண்ணம்

திருவாசக மாநாட்டு மலராக

வெளிவருகிறது

22—6—1964



உ

# திருப்பெருந்துறை

---

சிவம் பெருக்கும் திருநூலாகவும், சிந்தைக்குத் தித்திக்கும் செந்தமிழ்த்தேனாகவும், படிக்கின்றவர்கள் அனைவரையும் அமரராக்கும் அருள் நூலாகவும் திகழ்வது திருவாசகமாகும். திருவாசகம் தெரியாத தமிழன் ஒருவனும் இருக்கவேமுடியாது.

அத்தகைய திருவாசகத்தில் பாட்டுக்கள்தோறும் நாம் திருப்பெருந்துறையைப் பார்க்கிறோம். ஆனால் திருப்பெருந்துறை எங்கேயிருக்கிறது? அது ஆற்றுத் துறையா? கடற்றுறையா? அல்லது ஓர் இடத்தின் பெயரா? என்பது நம்மில் பெரும்பாலோர்க்குத் தெரியாது. பெருந்துறையா! இதோ ஈரோட்டிற்குப் பக்கத்தில் இருக்கிறதே என்னலாம் சிலர். தேவாரத்தில் வந்துள்ள பேணுபெருந்துறைதானே; இதோ இருக்கிறதே எனலாம். இவை திருப்பெருந்துறை ஆகா.

திருப்பெருந்துறைக்கு இன்று 'ஆவுடையார் கோயில்' என்பது பெயர். இது மாயூரம்-காரைக்குடி புகைவண்டிப் பாதையில், அறந்தாங்கிக்கு அணுமையில் ஒன்பது கல் தொலைவிலே இருக்கிறது. இன்று

பெருந்தூர்தி வசதியுண்டு. அன்று பாண்டியநாட்டுக் கிழக்கெல்லையாக இருந்தது. இன்று சோழநாட்டுத் தஞ்சைமாவட்டத்தின் தெற்கெல்லையாகத் திகழ்கிறது. மிக நல்ல அமைதியான சூழல். வெள்ளாற்றங்கரை. தோப்பும் துரவும், சோலையும் சாலையும் சூழ்ந்த மணற் பாங்கான இடம். வயற்பரப்பும் சிறுகாடும் கலந்து விளங்குவதால் இதனை மருதமொடு தழுவிக்கிடக்கும் முல்லைநிலம் எனலாம்.

கோயில்கணக்குகளில் இந்தத்தலம் ஆளுடையார் கோயில் என்றே வழங்கப்பெறுகின்றது. திருமுறைகளிலும் வடமொழி தென்மொழி இலக்கியங்களிலும் அநாதி மூர்த்தித்தலம், ஆதி கைலாயம், உபதேசத் தலம், குருந்தவனம் அல்லது குந்தவனம், சதுர்வேத புரம், ஞானபுரம், திரிமூர்த்திபுரம், தட்சிண கைலாய புரம், தென்கயிலை, தேசுவனம், பராசத்திபுரம், பூலோக கைலாயம், யோகபீடபுரம், யோகவனம் முதலான பல பெயர்களால் குறிக்கப்பெறுகின்றது. திருவாசகநூல் சிவபுரம் என்றும் குறிக்கிறது.

கல்வெட்டுக்களில் 'மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றம் பிரமதேசம் தனியூர்த் திருப்பெருந்துறையான பவித்திர மாணிக்கச் சதுர்வேதி மங்கலம்' என்று வழங்கப்பெறுகின்றது.

கோயிலை நடுவாகவைத்து ஊர் கிழக்கு மேற்கில் வளர்ந்துள்ளதால் கோயிலின் பெயரே இடத்திற்கும் ஏற்பட்டது என்று கருதலாம்.

பல குளங்களும், கிணறுகளும், ஆறும் காலும் சூழ்ந்திருப்பதால் நீர்ப்பஞ்சம் இல்லாத புனல்நாட்டின் பகுதியாதற்கு ஏற்ற சூழலுடையது.

திருவாசகம் படித்தவர்களெல்லோரும் தேடிவந்து தரிசிக்கும் பேறுபெற்றதால், வருகின்றவர்கள் தங்குதற்கு ஏற்ற வசதியான பல விடுதிகளும், மடங்களும் உள்ளன. இத்திருக்கோயில் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது ஆதலால் திருவாவடுதுறை ஆதீனத்துக் கிளைமடம் ஒன்று எல்லா வசதிகளும் நிறைந்ததாக உள்ளது.

இங்கு வாழ்கின்ற மக்களில் பெரும்பாலோர் உழவர்கள். அவர்கட்குத் தக்கவண்ணம் தொடக்கநிலைக் கல்வி நிலையங்கள் பல உள்ளன. ஊர்காவற்றுறை, வேளாண்மை வருவாய்த்துறை (ரிவினியூ) முதலான சிறு அலுவலகங்களும், அஞ்சல்நிலையமும் உள்ளன.

இறைவன் நம்மீதுவைத்த பரமகருணையினால் நம் பரிபாகத்திற்கு ஏற்ப உருவமாயும், அருவமாயும், அருவுருவமாயும் தலங்கள்தோறும் எழுந்தருளி அருள் வழங்குகிறார் என்பதை அன்பர்களனைவரும் அறிவர்.

அவற்றுள் அருவமாகி அருள்வழங்குந்தலம் சிலவே. தில்லையாகிய சிதம்பரத்தில்கூட, பெருமான் மூன்று நிலையிலும் இருப்பதைப் பார்க்கிறோம். இத்தலத்தில் பெருமான் அருவமாகவே அதாவது உருவம் ஒன்றும் இன்றியே எழுந்தருளியிருக்கின்றார்.

சிற்பப் பொக்கிஷமாகிற முன் மண்டபங்களைத் தாண்டி உள்ளே போனால் கருவறையாகிய சுவாமி சந்நிதியை அடைகிறோம். பல தலங்களில் பார்த்த ஞாபகத்தோடு பார்க்கின்றோம். அங்கே சிவலிங்கத் திருமேனியைக்கூடக் காணாமையால், இது என்ன திருவுருவமே இல்லாத கோயிலா என்று திகைக்கிறோம். கண்ணால் துழாவுகிறோம். ஒரு பீடம் தென்படுகிறது. அதுதான் சுவாமி; கும்பிடுங்கள் என்று நம்பியார் பார்க்கச் சொல்லுகின்றார். இதுவா சுவாமி என்று அவரைக் கேட்கின்றோம். அவர் சொல்லுகிறார் : சிவலிங்கம் மூன்று பகுதியானது. மேலே குழவி போன்ற ஒரு பகுதி. அதன் அடியிலே சதுரமான ஒரு பீடம். அதற்கும் அடியிலே ஒரு பீடம். மேலுள்ள பகுதிக்குப் பாணம் என்று பெயர். நடுவிலுள்ள பீடத்திற்குச் சத்திபீடம் என்று பெயர். அடியிலுள்ள பகுதிக்குப் பிரமபீடம் என்று பெயர். இம்மூன்றும் கூடிய சிவலிங்கத்தையே மற்றத் தலங்களில் நீங்கள் காண்கிறீர்கள். இங்கே சத்திபீடமாகிய பகுதிமட்டும் இருக்கின்றது. அதற்குமேலே குவளைசாத்தி அலங்காரம் செய்கிறோம், இங்கே தரிசிக்க வருகிறவர்கள் கண்டு உய்வதற்காக. அவ்வளவுதான். இங்கே சுவாமிக்கு உருவமே இல்லை. வருகின்றவர்கள் இந்தச் சத்திபீடத்தில் அறிவொளி வடிவாகத் தம் ஆன்மநாயகனைத் தியானித்து வழிபடுக எனக் கூறுகிறோம். வருகின்றவர்கள் ஞானப் பசிகொண்டு வருவதால் அங்ஙனமே மெய்ம்மறந்து, சிந்தையொன்றித் தியானிக்கிறார்கள். உருவமில்லாத அருவமாக இறைவன் காட்சி வழங்குகின்றார்; ஆன்மநாதர் என்ற பெயரைத் தாங்குகிறார்.

இதுமட்டுமல்ல. இங்கே கொடிமரம், நந்தி, பலிபீடம் இவைகளைப் பார்த்தீர்களா! இல்லையே! அருவமாய் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு உருவமான இந்த அங்கங்கள் எதற்கு? வேண்டாமல்லவா! தியானிக்கும்போது தியானிக்கின்றவர்களுடைய அகமுகப் பார்வையிருக்கிறதே அதுவே நந்தி. வீணதண்டாகிய சுழுமுனை வழியாக மேல்நோக்கிப் புருவமத்திவரை செல்கின்ற தியானமே கொடிமரமும். அதில் ஏறியிருக்கிற கொடியும். மணிபூரகமாகிற மார்புப்பகுதியே பலிபீடம். இங்கே எல்லாம் ஞானமயம். ஆதலால் உருவம் ஒன்றுமில்லை என்று விளக்கந்தந்து நம்மை அன்புலகிலிருந்து உயர்த்தி அறிவுலகில் உலாவவைத்து அருள் வடிவாகிய அம்பாள்சந்நிதிக்கு அழைத்துப்போகிறார்.

அங்கே வாயிலில் மிடுக்கோடு வீரபத்திரக்கடவுள் எழுந்தருளியிருக்கிறார். அவர் திருமேனி அமைப்பால் வேகவடிவமாகக் காணப்பட்டாலும் திருமுகத்திலே ஒருவகையான சாந்தம் பொழிந்துகொண்டிருப்பதைப் பார்ப்போம். சூரியன் நிலவைப் பொழியுமா? நெருப்பு நீரைக் கக்குமா? கோபமூர்த்தியாகிய இவர்முகத்திலே இத்தனை சாந்தமா? ஆழ்கடல்போல இவர் திருவுள்ளக்கிடக்கை எவ்வளவு கம்பீரமாக உள்ளது என்றெல்லாம் எண்ணத்தோன்றும். கூட வருகிற நம்பியாரைக் கண்டு அருவமேயான ஆலயத்தில் இந்த உருவம் ஏனென்று கேட்டோம். இவரைக் கும்பிட்டுக்கொண்டு வாருங்கள் சொல்கிறேன் என்று கூறி, அவர் கூட்டிச் சென்றார். அம்பிகையின் சந்நிதியை அடைந்தோம்.

எனக்கு ஒரே வியப்பு. அம்பிகையை வழிபட வாசலில்லையா? என்ன எதிரிலே அழகான கருங்கற் பலகணியை அமைத்திருக்கிறார்களே; உள்ளே விளக்கு எரிவதுதான் தெரிகிறது; வேறு என்ன இருக்கிறது என்று அடுக்கடுக்காகக் கேட்டேன். அவர், சுவாமியைப்போல அம்மையும் அருவமாகவே இருக்கிறார்; பக்கத்திலே ஒரு நுழைவாசல் இருக்கிறது; அதன் வழியாக உள்ளே சென்று பூசைப் பணிவிடைகளைச் செய்கிறோம் என்று சொல்லி அழைத்துச் சென்றார். தீபத்தைத் தூண்டிவிட்டார். இதோ பாருங்கள் ஒரு பதுமபீடம்; மேலே மேருப்பிரஸ்தாரமான ஸ்ரீவித்யா சக்கரம்; இவைதான் அம்மை எழுந்தருளியிருக்கின்ற அடையாளம்; இவற்றிற்குத்தான் வழிபாடுகளனைத்தும்; அம்மை மந்திரவடிவாக எழுந்தருளியிருக்கிறார் என்பது ஐதீகம்; அம்மையின் பெயர் யோகாம்பிகை; அம்மை தவத்திருக்கோலத்தில் மறைவாக யோகம் இருப்பதால் இந்தப் பெயர் வந்தது என்று அவர் சொன்னார். நாம் படிப்பதற்காக வாத்தியார் படிப்பது போல எனக்கு என்னவோ தோன்றியது; மக்களாகிய நாம் யோகம் பழக இப்படி அம்மை எளிவந்த கருணையோடு யோகம் செய்வதால் வந்த பெயரென்று. இந்தச் சந்நிதிக்கு வந்தவுடன் நம்மையும் மறந்து எங்கோ இன்பவுலகிலே சஞ்சரிப்பதுபோலத்தான் நமக்குத் தோன்றுகிறது.

வழிபட்டு வெளியில் வந்ததும் எதிரில் சதுரமான மேடையிலே ஒரு மரத்தின்வடிவம் கருங்கற்சிற்பமாகக் காட்சி வழங்கிற்று. அது என்ன என்று நம்பியாரைக் கேட்டேன். அவர் அதுதான் குருந்தமரம்; இதனடியிலிருந்துதான் வாதவூரருக்கு ஆன்மநாதராகிய சிவபுரத்தரசர் குருமூர்த்தியாக எழுந்தருளிச் சிவஞானோபதேசஞ்செய்தார் என்றார். உடனே என்னுடைய மனப்படத்தில் பழைய வரலாறு நிழலோடத்தொடங்கியது. குருநாதர் ஒரு சிலாதலத்தில் இடது காலை மடக்கி

வலது காலைத் தொங்கவிட்டுக்கொண்டு ஞானமுத்திரைக்கையுடன் இருப்பது போலவும் எதிரிலே வாதவூரர் தலை வணங்கி வாய் பொத்தி மெய்ம்மறந்து கண்ணீர்வழியக் களிததும்ப நிற்பதுபோலவும் உள்ள ஒரு தெய்வீக ஞானக்காட்சியை என் சிந்தையாற்கண்டேன். என்னை மறந்துநின்றேன். அப்போது நம்பியார் இரண்டாங்காலத்திற்கு உரிய நேரமாகிவிட்டது, நான் போகவேண்டும் வாருங்கள் என அழைத்தார். எனக்கும் இரண்டாங்கால தீபாராதனை பார்க்கவேண்டும் என்ற ஆசை. வலமாகவந்து சுவாமி சந்நிதியை மீட்டும் அடைந்தோம்.

கருவறையின் உள் திருவாசல் சாத்தியிருந்தது. அதற்குமுன் திரை தொங்கியது. விளக்குகள் அணியணியாக எரிந்தன. காலமென்றால் மேளம் சுத்தமத்தளம் எல்லாம் வாசிப்பார்களே என்றிருந்தேன். ஒன்றும் இல்லை. சின்னம், சங்கு, மணி இவற்றின் சத்தந்தான் கேட்டது. கதவு திறந்தது. திரை விலகியது. உள்ளே நம்பியார் கையில் அடுக்குத்தீபத்தை ஏந்திநின்ருர். ஒரே புகைமயம். இவ்வளவுபுகை எங்கேயிருந்து வருகிறது என்று உற்று நோக்கினேன். சுவாமி திருமுன்புள்ள படைகல்லில் சாதம் மலைபோலக் கொட்டிக்கிடந்தது. அதைச்சூழத் தீம்புழல் என்று வழங்கப்பெறும் தேங்குழல் அதிரசம் அப்பம் வடை முதலான பண்டங்கள் பரப்பப்பெற்றிருந்தன. சாத மலைமேல் வில்வங்கள் சிதறிக்கிடந்தன. மலையிலிருந்து புகை கிளம்பிக் கருவறை முழுதையும் மூடியிருந்தது. அதற்கு அணுமையில் வெளியிலே நம்பியார் தீபாராதனைகளை முறைப்படிச் செய்து முடித்தார்; சோடசஉபசாரங்களையுஞ்செய்தார்; வெளியில்வந்து விபூதி கொடுத்தார்; திருப்தியாகத் தரிசனம்ஆயிற்ரு என்று கேட்டார். என்ன ஐயா! சாதத்திற்கா தீபாராதனை என்றேன். நம்பியார் அதுதான் இந்தத் தலவிசேஷம்; சுவாமி ஆன்மநாதரல்லவா! மிகக்கிழவர். அவருடைய வயது அளவிடமுடியாததல்லவா! ஆதலால் அன்னத்தின் ஆவிதான் அவருக்கு நைவேத்தியம்; அவர் ஆவிநாதராயிருந்து நமக்கு ஆன்மநாதராக விளங்குகிருர் என்ருர். எல்லாம் எனக்கு வியப்பாகவே இருந்தது.

இங்கே உற்சவரைக் காணவில்லையே; உற்சவமே இல்லையா என்றேன். ஆண்டிலே இரண்டு விழாக்கள் உண்டு. சிதம்பரம்போல ஆனியும் மார்கழியுந்தான். ஆனல் இங்கு ஆனித்திருவிழா மிகச் சிறப்பானது. ஆனி மகநட்சத்திரந்தானே மாணிக்கவாசகர் சிவாத்துவித முத்திபெற்ற சிறந்தநாள். ஆதலால், மாணிக்கவாசகர் அறிவாற் சிவனேயானதால் அவருடைய திருவுருவம் அதோ இருக்கிறதுபாருங்கள்; இங்கே எல்லா விழாக்களும் அவருக்குத்தான். பிறதலங்களில் சுவாமி

அம்பாளுக்கு வாகனங்களிருப்பதுபோல இங்கு இடப வாகனம்முதல் எல்லாம் மாணிக்கவாசகருக்குத்தான்; அவர்தான் வீதியுலாவருவார் என்ருர். அப்படியானல் பக்தோற்சவம் என்று சொல்லுங்கள் என்றேன். இல்லை இல்லை; அதுதான் பிரமோற்சவம்; மாணிக்கவாசகர் இங்குச் சிவமாகவே விளங்குகின்ருர் அல்லவா! ஆதலால் இங்கு நடைபெறும் விழா பிரமோற்சவந்தான்; ஆனல் மேளம் தாளம் முதலான புறக்கிரியைகள் இல்லை; எல்லாம் ஞானமயம் என்ருர். அப்போது எங்கோ ஞானகானனத்தில் ஞானியுடன் உலாவந்து தாங்கமுடியாத ஆனந்தத்துடன் புறப்படுவதுபோன்ற ஓரனுபவத்துடன் புறப்பட்டேன். இப்படித் திருப்பெருந்துறைக்கோயில் அன்பின்வழி வளரும் அருள் அனுபவக் கருவூலமாவதைக் கண்டு உட்கோபுரத்தைத் தாண்டி வெளியில் வந்ததும் என்ன அவசரமா? கண்களுக்கு விருந்தாக நாங்கள் இருக்கின்ருேமே! கவனிக்காமல் போகலாமா? என்ற ஓர் ஒலிகேட்டது. திரும்பிப் பார்த்தேன். யாருமில்லை முன் மண்டபத்திலுள்ள சிற்பங்களே சிரித்தன. ஒவ்வொன்ருகத் தம் வரலாறுகளைக் கூறத்தொடங்கின.



தேவதீர்த்தக்கரையில் இதோ விநாயகர் பதினெரு கைகளோடு இருக்கின்ருர் பாருங்கள். விநாயகருக்கு அம்பாள் ஏது? கல்யாணமாகிவிட்டதா? என்று கேட்காதீர்கள். அவருக்கு எத்தனையோ கல்யாணங்கள் ஆகியிருக்கின்றன. சித்தி புத்தி, வல்லபை முதலாகப் பலபேரை மணந்துகொண்டிருக்கிருர். இந்த அம்மா வல்லபை. இவர் நிற்பதுபோலத் தோற்றுகிறதல்லவா? அம்மை விநாயகரின் இடது தொடையில் சார்ந்தாற் போல உட்கார்ந்துதான் இருக்கிருர். [விநாயகருடைய பெரிய உருவத்தைச் சார்ந்து அம்மை நிற்பதும் இருப்பதும் ஒன்றுபோலவே காணப்படும். கைகளிலுள்ள ஆயுதங்களை உற்றுப் பாருங்கள். அப்பா, அம்மா, மாமா, தம்பிகள் எல்லாருக்கும் உரிய ஆயுதங்களும் விளங்குகின்றன. மாமாவான திருமாலுக்குப் பிரம கபாலம்விழுங்கிய சக்கரத்தை விகடக்கூத்தாடி வாங்கிக் கொடுத்தவர் இவரல்லவா! வாங்கிக் கொடுப்பதற்காக அதைத் தன் கையில் ஏந்தியிருக்கிருர். வலதுகையிலே மோதகம். விளையாட்டுப்பிள்ளை எப்போதும் வெல்ல உருண்டையை வைத்திருப்பதுபோல வைத்திருக்கின்ருரே! மோதகத்தில் எவ்வளவு ஆசை என்று எண்ணுவோம். மோதகமா அது. நீங்காது நிறைந்த அன்பால் பரிபாகமுற்ற நம்மை உள்ளங்கையிலே வைத்து எப்போதும் பாதுகாப்பாரென்ற ஓரடையாளமல்லவா?



இவர் யார் என்று கேட்கிறீர்கள். இவர்தான் மதுரைவீரர். அந்த மதுரைவீரனை எண்ணிவிடாதீர்கள். சோமசுந்தரப்பெருமான் வாதவூரடிகளுக்காகக் குதிரைகளை ஓட்டிக்கொண்டு குதிரை வீரராகவந்து, குதிரைகளைக் கயிறு மாறிப் பாண்டிய மன்னனிடம் கொடுத்துச் சென்றாரே; அவர்தான் இந்த வீரர்.

எவ்வளவு முரட்டுக் குதிரை. தாவியோடுகின்ற ஓட்டம். அதனைத்தடுத்து நிறுத்துவதால் அதற்குள்ள கோபம். கடிவாளத்தை இழுத்துப் பிடிக்கின்ற வீரர் பெருமானுடைய கட்டுமஸ்தான உடல். இழுத்துப் பிடிப்பது இடதுகை வேலைதான், எளிமையான காரியந்தான் என்கிற அலட்சியமான பார்வை. ஒரு வீரன் அணியவேண்டிய அணிவகைகள். குதிரைக்கு இடும் சேணங்களின் அமைப்பு. இத்தனையையும் அனுபவிக்கிறோம் இவர் தோற்றத்தில். பக்கத்திலே காதில் குண்டலமும், தலையில் சிரவடமும், மார்பிலே கண்டிகையும், நெற்றியில் சந்தனப்பொட்டுமாக இருப்பவரே குதிரைகளை ஒப்புக்கொடுக்கவந்த மாணிக்கவாசகர். இவருக்காகத்தானே பெரிய தென்னன் பெருந்துறையான் குதிரைவீரனாக வந்தது. அந்த அருளின் அளவை எண்ணி வியந்த முகபாவத்துடன் அவர் நிற்கிறார்.



இதோ கம்பீரமான தோற்றத்துடன் இருப்பவர் ஊர்த்துவ தாண்டவமூர்த்தி. எவ்வளவு எடுப்பான பார்வை. இவருக்கு எட்டுக்கைகள். வலது கைகளில் உடுக்கை, பாணம், அங்குசம், அபயம் விளங்குகின்றன. இடதுகைகளில் எரி, மான், வில், மணி இவைகள் காட்சியளிக்கின்றன. இடது காலைச் சிறிது வளைத்து முயலகன்மீது ஊன்றியிருக்கின்றார். முயலகன் சுமை தாங்காமல் விழிபிதுங்கத் திருமுகத்தை நோக்குகிறான். வலதுகாலைப் பாதத்தின் முன்புறம் வெளியில் தெரியத் தலைக்குநேரே நிமிர்த்தி உயர்த்தி ஆடுகிறார். நந்தியும் பாணசுரனும் பக்கவாத்தியக்காரர்கள். நந்தி மத்தளம் கொட்டுகிறார். பாணசுரன் குடமுழா என்னும் பஞ்சமுக வாத்தியம் வாசிக்கிறான். இப்படிக் காளியோடு கலைப் போட்டி நிகழ்கிறது. வெறுங்களிப்புக் கலையா? மக்களுடைய ஆணவமலத்தையடக்க மேற்கொண்ட அருட் கலை. அதனால் காளி தோற்று நாணித் தலைகுனிந்து, கைகளைப் பிசைந்துகொண்டு பெண்மை தோன்ற எதிரிலே இருப்பதைப் பாருங்கள். இதனை வள்ளுவர் கூடப் பாராட்டினார் என்று ஒருசெய்தி உண்டல்லவா? " இழைநக்கி நூல் நெருடும் ஏழை அறிவேனோ? குழை நக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து " என்றாராமே.



காளியின் முகத்தில் எவ்வளவு கோரமும் கோபமும் இருக்கவேண்டும். அவள்விழிகள் அவற்றைக் காட்டு கின்றன. ஆனாலும், நாணம் முகத்தில் ஒளிவிடுகிறது. எப்படிப்பட்டவர்களுக்கும் தோல்வி ஏற்படுமானால் இப்படித்தான்.

காளிக்குக் கைகள் பத்து. முதலில் வலதுகைகளை மேலிருந்து கீழே வரிசையாகப் பார்த்துவாருங்கள். டமருகம், சக்கரம், சுரிகை, சூலம், தொங்குகின்றகை, பிசைந்த பாவனையிற் கைகள் இவைகளைக் காணலாம். இடது கைகளில் பாசம், அங்குசம், கேடகம், கபாலம், தொங்குங்கை, பிசையுங்கை இவைகளைக் காணலாம். இடதுகாலை முன்வைத்து, வலது குதிகாலைத் தூக்கி, பாதத்தையூன்றி மிடுக்காக நின்றாலும் கைகளைப் பிசைகின்றார். பெண்கள் கைகளைப் பிசைவது எப்போது? ஏதாவது வெட்கப்பட நேரிட்டால்தானே.



இதோ காணப்படுகிறவர் வீரபத்திரர். நிமிர்ந்த நிலையில் எதையும் பொருட்படுத்தாத பார்வை இருப்பதைக் கவனியுங்கள். இவர் வாசலின் மேல்பாகத்தில் இருக்கிறார். இவருக்கு எட்டுக்கைகள். வலதுகை நான்கிலும் முறையே சூலத்தின் காம்பு, தமருகம், கத்தி, வேதாளம் இவற்றையும், இடதுகை நான்கிலும் கபாலம், கேடகம். மணி, சூலத்தின் முன்பகுதி இவற்றையும் ஏந்தியிருக்கிறார். கீழே ஓர் அசுரன் விழுந்து கிடக்கிறான். அவன் தலையிலே சூலத்தின் நுனி குத்திக் கொண்டிருக்கிறது. சூலம் குறுக்காகப் பிடிக்கப்பட்டிருப்பதைக் கவனியுங்கள். இவரின் மீசையும் கோரப் பற்களும் பிதுங்கிய விழிகளும் இவருடைய காவற் சிறப்பைக் காட்டுகின்றன. ஆகமங்களிலும் சிற்ப சாத்திரத்திலும் இவருக்கு உக்கிர வீரபத்திரர் என்பது பெயராகக் காணப்படுகிறது.



அதே நிலையில் மற்றொரு வீரபத்திரர் பத்துக் கைகளுடன் எதிரில் இருக்கிறார் பாருங்கள். ஆனால், கையில் சூலம் இல்லை. வாள் இருக்கிறது. கைகளைக் கவனியுங்கள். வலது கைகளிலே மேல்கை அம்பறாத் தூணியிலிருந்து அம்பு எடுப்பதுபோலவும் மற்றக் கைகளில் பரசு, சூலம், கட்கம், கைவாள் இவைகளும் இடதுகைகளில் வில், மான், தமருகம், கேடகம், தட்சன் தலை இவைகளும் விளங்குகின்றன. தக்ஷயாகத்தை அழித்த வேகத்துடன் இவர் அவனைத் தூக்கி மடியில் வைத்து அவனுடைய தலையை அறுக்கும் நிலையிலிருப்பதால் தட்சசிரச்சேத வீரபத்திரர் என்ற திருநாமம் உடையவர்.

இந்த இரு உருவங்களிலும் கோபத்தன்மையைக் குறிப்பனவாகக் கண்விழி, புருவங்கள், மீசை மயிர், உதடுகள் இவை அமைந்துள்ள சிற்ப நுணுக்கத்தைக் கவனியுங்கள். நேரில் காணும்போதுதான் இத்தனைக் கருத்துக்களையும் நாம் எளிதில் உணருவோம்.



இதோ முதல்தூணில் மிகப் பயங்கரமான உருவம் தெரிகிறதல்லவா! இவர்தான் நரசிம்மமூர்த்தி. திறந்த வாய். வாயில் வரிசையான கோரப்பற்கள். பத்துக் கைகள். மடியிலே இரணியன். இவர் வலது கைகளில் குடர், சக்கரம், வச்சிரம் இவைகளும் இடது கைகளில் குடல், சங்கம், கேடகம் இவைகளும் விளங்குகின்றன. வலது கையொன்ருல் இரணியன் மார்பை அமுக்கிப் பிடித்துக்கொண்டு, இரண்டு கைகளாலும் வயிற்றைக் கீறி, குடலைப் பிடுங்கி மாலையாகப் போட்டுக்கொள்ளும் பாவனையில் இருக்கிருர். பக்கத்திலே இரணியன் மகனுகிய பிரகலாதன் நின்றுகொண்டிருக்கிருன். அவன் முகபாவத்தில் அச்சமும் அன்பும் கலந்த பார்வை.

இவர் இருப்பது முன்மண்டபம். இதற்குப் பெரிய மண்டபம் என்று பெயர். இதில் முதல் வரிசையில் உள்ள தூண்கள் ஏழுதான். மொத்தம் அறுபது தூண்களே உள்ளன. மக்கள் ஆசை எவ்வளவு பாருங்கள். ஆயிரக்கால் மண்டபம் என்று இதனை அழைக்கிருர்கள்.



இவர் வில்பிடித்த வேலவர்; போருக்குப் புறப்படத் தயாராகிறார்; இடதுகாலைத் தூக்கித் தன் வாகனமாகிய மயிலின்மீது வைத்துக்கொண்டு. பாலசுப்பிரமணிய நிலை. நான்கு கைகள். வலதுகைகளில் வேலும் பாணமும்; இடது கைகளில் வச்சிரமும் வில்லும். மயில் தன்னுடைய இறகை உதறிக்கொண்டு புறப்படத் தயாராக நிற்கிறது.



ஓருருவில் ஈருருவம் தோன்றுகிறது. வலதுபக்கம் சிவனுரு. இடதுபக்கம் திருமாலுரு. இதனைக்கண்டே 'அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்று அருளிச்செய்கின்றார் அப்பர்சுவாமிகள். வலதுமுடி சடாமகுடம். இடதுமுடி இரத்தினக் கிரீடம். வலதுகைகளிலே மழுவும் அபயமும். இடதுகைகளிலே சங்கும் ஊருஹஸ்தமும். அரையிலே வலதுபக்கம் புலித்தோல் கச்சை. இடதுபக்கம் பீதாம்பரம். இவ்வளவும் சிவ - விஷ்ணுக்கள் இணைந்த தன்மையைக் காட்டுகின்றன.



இது சிற்பத்திறமைக்கு ஓர் உதாரணமாக விளங்குவது. மரவேலைபோன்ற கருங்கற் சிற்பவேலை. அந்தக்காலத்திலே சிற்பசாஸ்திரிகள் திருப்பணி ஒப்பந்தம் செய்து கொள்ளுகிறபொழுது ஆவுடையார்கோயில் கொடுங்கையும், திருவீழிமிழலை வெளவால்நத்தி மண்டபமும், கடாரங்கொண்டான் திருமதிலும் தவிர ஏனைய திருப்பணிகளைப்போலச் செய்து கொடுப்பேனாகவும் என்று எழுதிக் கைச்சாத்திட்டுக் கொடுப்பார்களாம். பாருங்கள் கொடுங்கைவேலை எவ்வளவு அருமையானது என்பதை. இதோ தெரிவது கொடுங்கையின் ஒரு மூலையின் இணைப்புவேலை. சாத்து எனப்படும் கைமரங்களின் வளைவு சித்திர வேலைப்பாடுகளோடு பிணைந்து நிற்கின்றன. அவற்றின் இடையே முட்டு முட்டாகத் தெரிவன குமிழ் ஆணிகள். மேல்பலகை காலங்குலகனமுள்ள கருங்கற்பலகை. யாவும் கருங்கற் சிற்பம். ஏதோ பார்க்க எளிமையாகக்காணப்பட்டாலும் சிற்பியின் கைவன்மை எவ்வளவுதூரம் கடினமான கருங்கல்லிற் செயற்பட்டிருக்கவேண்டும் என்று கருதுகின்றபோதுதான் இதன் அருமை அறியப்படும்.



வீரமும் இளமையும் தோன்ற இடது கையினால் மீசையை முறுக்கிக்கொண்டிருக்கிறான் இம்மறவன். தமிழ்மக்கள் வைத்துக்கொள்ளும் மீசை, தலையலங்காரம், அணிவகைகள், ஆடை அணியுமுறை, காலணிகள், காதணிகள் இவற்றைக் காணலாம்.



இவள் வலது கையில் பூங்கொத்தையும், இடது கையில் லாகவமாக ஆடையின் தலைப்பையும் பிடித்துக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இவளது முகத்தில் காமக்குறிப்பும் - நாணமும்கலந்த பாவம் வெளிப்படுகிறது. இளமை நலம் பொலியப் பெண்மைநிலையின் பரிபூரணத்தன்மையைக் காட்டிநிற்பதைப் பார்க்கின்றோம். இதிலும், நாம் நாகரீக சின்னங்களாகிற ஆடை அணிகள், பெண்களின் தலையலங்காரம் முதலியவைகளோடு, சிருங்கார நடனமாகிற நடனபேதத்தையும் அறிகிறோம்.

இத்தகைய வடிவங்களைக் கோயில் சிற்பங்களில் காண்பதாலேயே நம் முன்னோருடைய வாழ்வியற் கலைகளை இன்று நாம் கண்டறியமுடிகிறது.



பரிசதீட்சை



நயனதீட்சையும் உபதேசமும்



பூவார் அடிச்சுவடு பொறித்தல்



திருவாதவூரர் திருப்பணி செய்விக்கின்றார். பணிகள் விரைவாக நடக்கின்றன.



இதோ சுகாசனத்தில் இருப்பவர், அன்பும் ஆட்சியும் சிறந்த அமைச்சரிடத்தில் அருளும் கவிகையம் சுரக்கச்செய்து வாதவூரரை மாணிக்கவாசகராக்கிய அரிமர்த்தனபாண்டியர். இவரைச் சிலையில் சிற்பமாக வடிக்கத் தொடங்கிய சிற்பியின் உள்ளத்திலே, எத்தனையோ மன்னாதி மன்னர்கள் மண்ணை ஆண்டிருக்கிறார்கள்; எல்லோருமா எங்களைப் போன்றவர்களால் சிற்பத்தில் செதுக்கப்பட்டார்கள்; இவர்தான் அருள் வாழ்வில் பங்குகொண்டவர்; வாதவூரரிடம் மறைந்திருந்த சிவச்சோதி அவரிடம் வெளிப்படத் துணையாயிருந்தவர் என்ற எண்ணம் நிலவியிருக்கவேண்டும். ஆதலால், அரச உடையில் எல்லா அங்கங்களையும் அதற்குரிய ஆடையணிகளோடு அமைத்தாலும், இவரையும் மந்திரியாக வைத்து வேலை வாங்கிவிட்டோமே; குறித்த காலத்திலே குதிரை கொண்டுவராமைக்காகக் கொடுமைப்படுத்திவிட்டோமே என்ற அச்சம் முகத்தில் காட்சியளிக்க அமைத்திருக்கிறான். ஊன்றி அனுபவியுங்கள்.



ஏற்றறியாக் கையானும் ஏறுடையான் பரிமாவில், வீற்றிருந்தே வேந்தன் தரு பொன்னுடைப் பரிசிலைத்தன்,
தாற்றுக்கோ லாலேந்தித் தன் தலைமை தோற்றுவித்தல்.



நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்த நல்லருள்



நடுப்பகலில் சுடுமணலில் நல்லடியார் நெற்றியிலே
சுடுசெங்கல் ஏற்றிவைத்துத் துயரமிகத் தண்டித்தல்.



பண்சுமந்த பாடற் பரிசுபடைத்தருளும் – புண்சுமந்தமேனிப் புனிதன்.



முடிமன்னன் வாதவூரடிகள் திருவடிகளில் வணங்குதல்



திருச்சாழல்பாடி, ஊமைப்பெண்ணைப் பேசவைத்தது.



திருவாசகமென்னுஞ் செந்தமிழின் பெருநூலை
அம்பலத்தான் படியெடுத்து அனைவருக்கும் உவந்தளித்தல்



மாணிக்கவாசகர் திருவாசகத்திற்குப்பொருள் அம்பலக்கூத்தனே என்று சொல்லிச் சிவச்சோதியிற் கலத்தல்



தில்லை மூவாயிரவர்போல இந்தத் தலத்தில் பூசிப் பவர்கள் முந்நூறு அந்தணர்கள். இவர்கள் நம்பி யார்கள் என வழங்கப்படுவர். தில்லையில் தில்லைவா ழந்தணர்களுள் நடராஜப் பெருமானும் ஒருவராக விளங்கியது போலவே இத்தலத்தில் ஆன்மநாதர் முந்நூற்றுவரில் ஒருவராக விளங்குகிருர்.

ஒருகாலத்தில் பாண்டிய மன்னன், ஆன்மநாதர் பூஜைக்காக முந்நூறு பிராமணர்களைக் காசியிலிருந்து இங்குக் குடியேற்றினுன். அவர்களுக்குப் பொன்னுடை வழங்கக்கருதி, முந்நூறு ஆடைகளை எண்ணி எடுத் துக்கொண்டு முறையே கொடுத்துவந்தான். முடிவில் ஒன்று எஞ்சியது. அரசன் எங்கே ஒருவர் என்று கவன்ருன். ஆன்மநாதர் கிழவேதியராக வந்து பொன் னுடையைப்பெற்றுத் திருநீறு அளித்து மறைந்தார். மறுநாள் மன்னன் தான் அளித்த ஆடை ஆன்மநாதர் திருமேனியில் விளங்குவதைக்கண்டான். நாம் நேற்று அளித்த ஆடை இறைவன்மீது விளங்கக் காரணம் என்ன என்று ஐயுற்ருன். இறைவன் அசரீரியாக நாம் முந்நூற்றுவரில் ஒருவர் என்று திருவாய்மலர்ந்தார். அவர்கள் பெருமையை அறிந்த அரசன் அவர்களுக்கு வீடும் நிலமும் வழங்கிப் பாதுகாத்துவந்தான். அவர் கள் மனைவி மக்களுடன் வாழுகின்றகாலத்தில் தங்கள் பிள்ளைகளுக்கு வேத அத்தியயனம் செய்விக்கத் தக்க

ஆசிரியர் ஒருவர் கிடைக்கவில்லை என்று கவன்றார்கள். ஆன்மநாதரே கிழவேதியராக வந்து வேதபாடசாலை அமைத்து விநாயகரைப் பிரதிட்டை செய்து வேத அத்தியயனம் செய்வித்தார்.

அப்போது திருப்பெருந்துறைக்குப் பக்கத்திலே குறும்பர்களுக்கெல்லாம் தலைவனாக ஒருவன் விளங்கினான். அவன் பெயர் லுண்டாட்சன். சுழற்கண்ணன் என்பது அதன் பொருள். அவன் போர்க்காலங்களில் குறும்பர்களுடன் பாண்டியனுக்கு உதவியாகச்சென்று போர்செய்வான். அதனால் மன்னனுடைய அன்பைப் பெற்றான். அந்தச் செல்வாக்கினாலே பக்கத்திலுள்ளார் நிலங்களையெல்லாம் தனதாக்கிக்கொண்டான். முந்நூற்றுவர் நிலங்களும் அவன்வசமாயின. அந்தணர்களிடம் அரசன் அளித்த ஆவண ஓலை இல்லை. அல்லாமலும் அப்போது அரசாண்ட மன்னனோ நிலமளித்த மன்னனின் பேரன். லுண்டாட்சனுடைய நண்பன். ஆதலால் எந்த ஆதாரத்தைக்கொண்டு நாம் அரசனிடம் தெரிவிப்பது என்று மயங்கினர். இருந்தாலும் எப்படியாவது மன்னனிடம் முறையிட்டுப் பார்ப்போம் என்ற முடிவுக்கு வந்தார்கள். வேதபாடசாலை ஆசிரியரும் உடன்வர அந்தணர்கள் மன்னனிடம் சென்று முறையிட்டார்கள். அரசன் ஏதாவது ஓலையிருந்தால் ஆதாரம் காட்டுங்கள்; இல்லையானால் சாட்சியாவது சொல்லச்செய்யுங்கள் என்றான். கேட்ட அந்தணர்கள் எங்களுக்குச் சத்தியமே துணை; பரம்பரையாக நிலம் எங்களுடையதே என்று சொன்னார்கள்.

பாண்டியன் லுண்டாட்சனைப்பார்த்து, நிலம் உன்னுடையது என்பதற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா? என்று கேட்டான். லுண்டாட்சன் 'என் நிலம் மேட்டுப் பாங்கானது; பனையாழம் வெட்டினாலும் சொட்டுத் தண்ணீர் ஊறாது' என்றான். அந்தணர்கள் விழித்தார்கள். வேத ஆசிரியராகவந்த கிழவர் முன்வந்து 'எங்கள் நிலத்தில் மண்வெட்டிகொண்டு வெட்டினால் அவ்வெட்டுவாயிலேயே நீர் ஊறும்' என்றார். அரசன் நிலத்தைச் சோதித்துப் பார்த்தான். நீர் ஊறிற்று. கிழவேதியர் மறைந்தார். அந்தணர்கள் ஆன்மநாதரே தமக்குச் சாட்சியாக வந்தார் என்று எண்ணி மகிழ்ந்தார்கள். மன்னன் லுண்டாட்சனிடமிருந்து நிலங்களை மீட்டு அந்தணர்களுக்கு வழங்கி, நிலங்களைக்கவர்ந்த லுண்டாட்சனுக்குச் சிறைத்தண்டனை விதித்தான். லுண்டாட்சன், குறும்பவேளான் என்றும் அழைக்கப் படுவான். அவனே கும்பிட்டகையுடன் சந்நிதியிலே நிற்கிறான்.

இவற்றையெல்லாம் நன்ருகக் கண்டறிந்து சுவை கண்ட பூனையாகப் பின்னும் கலைச்சிறப்பைக் கண்டு களிக்கத் தொடங்கினேம். நம்பியார் வெறும் கண் காட்சிச்சாலையாகமட்டும் காணுதீர்கள்; ஒரு ஞான அனுபவநிலையமாகக் காணுங்கள்; இங்குள்ள மண்டபங்களும், தீபங்களும், வாயில்களும் அந்தக் கருத்தை உங்கட்கு நன்கு அறிவிக்கும் என்ருர்.

முதலில் இராஜகோபுரத்தைக் கண்டோம். இது கோயிலின் தெற்குப் பக்கத்திலுள்ள பெரிய கோபுரம். இதில் உட்பக்கமாக முருகன் எழுந்தருளியிருக்கிருர். இவரைக் கோபுரக் குமாரர் என்கிருர்கள். அருணகிரிநாதசுவாமிகள் இங்குவந்தபோது கோபுரத்திலிருந்து பிரணாவநாதக் குரல் ஒன்று எழுந்ததாம். சுவாமிகள் அதனைக் கொண்டு முருகன் இருப்பதை அறிந்து மூன்று திருப்புகழ்களைப் பாடினுர்களாம். ஞானபூமியாகிய இத்தலத்திற்கு இயையச் சிறிதும் மாதர்போக வருணனைகள் இன்றி, யாக்கையின் இழிவும் உடல் நிலையாமையுந்தோன்ற, பெருமான் குருந்தடிமேவிக் குருவாக இருந்து ஞானுபதேசஞ்செய்த செய்தியை அமைத்துத் திருப்புகழை அருளியிருப்பது அறிந்து இன்புறக்கூடியதொன்ரும்.

முருகப்பெருமானை வணங்கிக்கொண்டு உட்புகுந்தால் முதலில் காண்பது பஞ்சாட்சர மண்டபத்தை. இதைக் கனகசபை என்றும் சொல்லுவார்கள். இந்த மண்டபத்தில் வடகிழக்காகத் திரும்பி வலமாகச் சென்ருல் முதற்பத்தியின் முதல் அங்கணத்திலே மேற்பாவு கல்லிலே திருவைந்தெழுத்து அமைக்கப்பெற்றிருக்கிறதாம். அதனுல் வழிபட வருவோரும், வழிபட்டு வருவோரும் இங்கிருந்து நூற்றெட்டு உருவேனும் திருவைந்தெழுத்தை ஓதியே செல்லுதல்வேண்டுமென்பது இத்தல நியதி. அடுத்து அதே பத்தியில் வலமாகச் செல்லின் மேல் பாவுகல்லிலே எண்பத்தொரு பதங்களும், ஐம்பத்தோரெழுத்துக்களும், இருநூற்றிருபத்து நான்கு புவனங்களும், முப்பத்தாறு தத்துவங்களும், பதினெரு மந்திரங்களும் நான்கிதழ்த் தாமரை வடிவமாக அமைக்கப்பட்டுள்ளன. ஆகவே, பஞ்சாட்சர மண்டபம் அத்துவாக்கள் ஆறும், சீபஞ்சாக்கரமும் அமைந்த ஞானவடிவம்; நாம் அத்துவாக்களை ஒவ்வொன்ருகக்கடந்து ஆன்மநாதனைத் தரிசிக்கவேண்டுமென்ற எண்ணத்தை விளைவிக்கும் சாதனம் என்பதை அறிந்துகொள்ளவேண்டும்.

இம்மண்டபத்தைக் கடந்து உட்கோபுரவாயிலைத் தாண்டும்போது வாயிலில் மாலையாக எண்பத்தொரு விளக்குகள் காணப்படும். ஆன்மநாதரைப் பூசிக்கச் செல்லும் நம்பியார் முதலிலே துவாரபூஜை செய்து பதாத்துவாக்களைச் சோதனை செய்ததாகப் பாவித்து உட்புகுதல் வழக்கம்.

அடுத்துள்ள மண்டபம் நடனசபை என வழங்கப் படுவது. ஞானவடிவான ஆகாயத்தில் நடராஜப் பெருமான் ஆனந்ததாண்டவம் செய்யும்போது உண் டாகும் திருவடிச் சிலம்பொலி போன்றதோர் ஒலி ஆழ்ந்த அன்புடன்வரும் அனுபவ ஞானிகளுக்குக் கேட்கப்படும் என்பது ஐதிகம். இங்கே பதஞ்சலி வியாக்கிரபாதர் உருவங்கள் தூணிற்செதுக்கப்பட்டுள் ளன. நாட்டியங்களும், சங்கீதக்கச்சேரிகளும் இங்கே நடப்பது வழக்கம். அடியார்கள் பக்திப்பரவசத்தால் மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த பூவல்லி தெள்ளேணம் முதலானவற்றை நாட்டிய நாடகமாக ஆடுவதுண்டாம். இந்த மண்டபத்தைத் தாண்டி நாம் உள்ளேபுகும்போது வாயிலின் இருபக்கமும் வலம்புரி விநாயகர் எழுந்தருளியிருக்கிறார். சுவாமி பிரணவ வடிவினராக உருவின்றி அறிவாயிருப்பதால் உட்புகும் போது அன்பர்கள் பிரணவமந்திரத்தைத் தியானித் துக்கொண்டே செல்வதற்காக இருபக்கமும் பிரணவ வலம்புரி விநாயகர் எழுந்தருளியிருப்பதாக அறிந்து செல்லவேண்டும். இவ்விநாயகப் பெருமானை ஒட்டிய வாயிலில் தீபமாலை ஒன்றுண்டு. அதில் இருநூற்று இருபத்துநான்கு தீபங்கள் உள்ளன. இத்தீபங்கள் புவனங்களை அறிவிப்பன ஆதலின், பூசைக் காலங் களில் நம்பியார் இதனைப் புவனத்துவாவாகப் பூசித்து உட்புகுதல் மரபு.

இதனை அடுத்துள்ள மண்டபம் தேவசபை. இதன் வெளிப்புறத்தில் பதினொரு விளக்குகள் வைக்கப்பெற் றுள்ளன. இவை மந்திரங்கள். சைவசமயத்தில் சமய தீட்சையாவது பெற்றவர்களே அறியத்தக்கனவாகிய ஐந்து பெரிய மந்திரங்களும், ஆறு அங்க மந்திரங்களு மாகிய பதினொன்றும் விளக்காக அமைந்துள்ளன. ஆதலால், இவை மந்திராத்துவாக்களாகத் தியானிக் கப்படுவன. இதனையும் கடந்து பெருமானைக் காணப் போகிறோமென்ற சிந்தனையில் உட்செல்லவேண்டும்.

இதனை அடுத்திருப்பது கருவறைக்கு முன்புள்ள தான அர்த்தமண்டபம். இது சத்சபை என வழங்கப் பெறும். இம்மண்டபத்தின் நடுவிலே பெரிய படை கல் அதாவது அன்னத்தைக் கொட்டிவைக்கும் கல் ஒன்று உள்ளது. இந்தக் கல்லின் அடியிலே அன்ன பூரணியின் மந்திரம் எழுதப்பெற்ற இயந்திரத்தகடு வைக்கப்பெற்றுள்ளதாம். இக்கல்லிற்கு 'அட்சயசிலை' என்று பெயர். எந்நாளிலும் அன்னத்திற்குக் குறை வில்லாத கல் ஆதலால் இப்பெயர் பெற்றதுபோலும். இதன் வாயிலாகிய நான்காவது படிவாயிலில் முப்பத் தாறு விளக்குகள் அமைந்த ஒரு தோரணை விளக்கு இருக்கிறது. இது தத்துவாத்துவாவாகப் பாவிக்கப் பெறுவது. இதனையும் நம்பியார் பூசைக்காலங்களில் தத்துவாத்துவாவாகத் தியானம் செய்து சோதித்துக் கடந்து செல்லுதல் வழக்கம்.

இதனை அடுத்து உட்பக்கமாகச் செல்லும் வாயில் ஐந்தாவது படிவாயில். இதில் ஐம்பத்தொரு விளக்குகளோடுகூடிய சரவிளக்கு வைக்கப்பட்டிருக்கிறது. இது வர்ணத்துவாவைக் குறிப்பதாகும். வர்ணம் - எழுத்து. எழுத்துக்கள் அகரமுதல் க்ஷகரம்வரை ஐம்பத்தொன்ருதலின் இவற்றைக் குறிக்கும் அடையாளமாக இந்த விளக்குகள் அமைந்துள்ளன. இவற்ருல் அன்பர்கள் வர்ணத்துவாவைக் கடந்து இறைவன் விளங்குவதாக அறிந்து செல்லவேண்டும்.

இவ்வாயிலின் உட்புறமே ஆன்மநாதராகிய சிவபெருமான் விளங்கும் மூலஸ்தானம். இது ஆருவது படிவாயில். இங்கே ஐந்தே விளக்குகள் உள்ள ஒரு சரதீபம் உண்டு. இது ஐந்து கலைகளின் வடிவமாகத் தியானிக்கப்படுவது. ஆதலால், கலாதீபம் எனவும் வழங்கப்படும்.

இதனைக் கடந்துள்ள உட்புறம் ஆன்மேசர் எழுந்தருளியிருக்கும் கருவறையாகிய மூலஸ்தானமாகும். ஆன்மேசருக்குப் பின்புறத்தில் ஓங்காரவடிவமாக இருபத்தேழு விளக்குகள் எரிந்துகொண்டே இருக்கும். இவை நட்சத்திர தீபங்கள் எனப்படுவன. சுவாமி சந்நிதியில் இருமருங்கும் இரண்டு தீபங்கள் தூண்டா மணிவிளக்குகளாக எப்போதும் எரிந்துகொண்டே இருக்கும். அவை சிவனும் சீவனுமாகப் பாவிக்கப் பெறுவன. பின்புறத்தில் சிவப்பும் வெண்மையுமான இரண்டு விளக்குகள் உயரத்தில் விளங்கும். அவை முறையே சூரியனும், சந்திரனுமாவன. இந்தப் பகுதி ஆனந்தசபை எனப்படுவது. ஆகவே, ஆன்மநாதப் பெருமான் ஆறத்துவாக்களையும் கடந்த அறிவொளிப் பிழம்பாக - காலங்கடந்த மூர்த்தியாக - ஓங்கார ஒலி வடிவினராக-ஞானிகளால் அனுபவிக்கத்தக்க சச்சிதானந்தப் பொருளாக விளங்குகின்ருர் என்பதை நாம் அறிந்து உய்ய இக்கோயில் துணைசெய்கிறது. இவ்வண்ணம் ஞானனுபவ வழிபாட்டின்பின் கலைக்காட்சியிலும் கருத்தைச் செலுத்திய நாம் இனிக் கல்வெட்டுக் குறிப்புக்களைக் காண்போம் என்ருர்.

# கல்வெட்டுக் குறிப்புக்கள்

இந்தத் திருக்கோயில் கல்வெட்டுக்களில், இவ்வூர் மிழலைக்கூற்றத்து நடுவில் கூற்றம் பிர்மதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்திர மாணிக்கச் சதூர் வேதிமங்கலம் என்று கூறப்பெற்றுள்ளது. கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் 'நாயனுர் ஆளுடைய பரமசுவாமி' என்று அழைக்கப்பெற்றுள்ளார்.

நந்தீஸ்வரமாணிக்கவாசகர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலின் முன்புள்ள மண்டபம் இரகுநாத பூபாலன் மண்டபம் என்னும் பெயர் பெற்றுள்ளது. இப்பெயர் அங்குள்ள தூண் ஒன்றில் பொறிக்கப் பெற்றுள்ளது. அந்தத் தூணில் அம்மண்டபத்தைக் கட்டுவித்த இரகுநாதபூபாலன் திருவுருவம் செதுக்கப் பட்டுள்ளது.

மாணிக்கவாசகசுவாமிகளின் மூலஸ்தானத்திற்கு முன்புள்ள மண்டபம் கனகசபை மண்டபம் என்னும் பெயரோடு திகழ்ந்தது. இந்த மண்டபத்தின் மேற் பாகம் (ஏற்கனவே தூண்மட்டும் நிறுத்தி முடிவு பெருமலிருந்ததை) மேலே பாவுகல் (பாக்கல்) பரவிப் பூர்த்தி செய்த விபரம் இங்குள்ள ஐந்து பாடல்களால் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. இதைக் கட்டுவித்தவர் தமது பெயரைக் காட்டிக்கொள்ள அஞ்சி, இதனை விநாயகர் திருவருளாலும், கோபுரவேலவர் திருவரு ளாலும், ஆளுடையநாயகர் யோகநாயகியர் திருவரு ளாலும், மாணிக்கவாசகர் திருவருளாலும் கட்டிமுடிந் ததேயன்றித் தன்னுலியன்றதன்றுஎன்று கூறியுள்ளார்.

### இம்மண்டபம் கட்டுவித்ததன் பயன்

வேடம்போட்டு நடித்து மாந்தர்க்கு நல்லறிவு கொளுத்துதற்பொருட்டும், கதாகாலட்சேபம் செய்வ தற்கும், நாட்டியமாதர் ஆடுவதற்கும், பாட்டுக்கச்சேரி நடத்துவதற்கும் ஆகும். இச்செய்தியை இரண்டாம் பாடல் தெரிவிக்கிறது.

### பாவுகல் பரப்பி முடிவுபெற்ற காலம்

சகாப்தம் 1524 பிலவ வருடம் பங்குனி மாதம் ஒன்பதாம்நாள் சனிக்கிழமை மூலநட்சத்திரம் அட்டமி திதி இவை கூடிய நன்னுளில் இம்மண்டபத்தின்மேல் பாவுகல் பரப்பி முடிவுபெற்ற காலமாகும். அதாவது, 1524+78 = கி. பி. 1602 ஆகும். மேலும், விசய வருடத்தில் இவ்வேலை துவக்கப்பெற்று, பிலவ வருடத் தில் முடிவடைந்தது என்று ஐந்தாம்பாடலால் பெறப் படுகிறது. எனவே, இவ்வேலைமுடிய எட்டு ஆண்டுகள் ஆயின எனத் தெரியலாம். பாடல்கள் வருமாறு :

இதம்வெகு வாகுங் கனக
சபையி லெழு துஞ்சித்ரப்
பதம்வெகு வாகும் பவனஞ்செய்
தானிந்தப் பாக்கலெல்லாம்
நிதம்வெகு வாகச்செய் தான்வந்த
விக்கினந் தீர்த்துச்செய்தான்
விதம்வெகு வாகச்செய் தானெங்கள்
சொக்க விநாயகனே.

கோடிக்கை மற்றைக் கதைசெய்வங்
கோமளக் கோதையர்கள்
ஆடிக்கை காட்டு மடமாதர்
நாரிய ராயிழையார்
பாடிக்கை காட்டுங் கனக
சபைதன்னிற் பாக்கலெல்லாம்
வேடிக்கை யாகச்செய் தானெங்கள்
கோபுர வேலவனே.

திதிக்கும் சகாத்தமிங் கொன்றரை
யாயிரஞ் செல்லறு நான்(கு)
உதிக்கும் பிலவத்திற் பங்கூனி
மாதத்தி லொன்பதிற்றில்
பதிக்குங் கனக சபைமண்ட
பந்தன்னிற் பாக்கலெல்லாம்
மதிக்கும் படிமுகித் தானெங்கள்
மாணிக்க வாசகனே.

தலஞ்சேர் பிலவ வருடப்பங்
கூனி தனில்நவத்து
வலஞ்சேரு நற்சனி வாரத்து
மூல மகிழட்டமிப்
பலஞ்சேரு நாளிற் கனக
சபைதன்னிற் பாக்கலெல்லாம்
நலஞ்சே ரவேமுகித் தானெங்க
ளாளுடை நாயகனே.

எண்காண் விசைய வருடத்
துவக்க விதம்பெறவே
தண்காண் பிலவ வருடப்
பங்கூனி தனில்நவமாம்
பண்காண் கனக சபைமண்ட
பந்தனிற் பாக்கலெல்லாம்
கண்காண வேமுகித் தாள்யோக
நாயகிக் காரிகையே.

### தியாகராாசர் மண்டபம்

இதை இக்காலம் தியாகராாசர் மண்டபம் என்று மக்கள் வழங்கினும், இதன் பெயர் அச்சுத பூபால மண்டபம் ஆம். இது அங்குள்ள முத்துவிநாயகருக்கு அருகில் தென்பக்கத்தில் உள்ள தூணில் பொறிக்கப் பெற்றுள்ள ஒரு கல்வெட்டால் அறியக்கிடக்கின்றது. இம்மண்டபத்தின் திருப்பணிக் குறையை முடித்தவர் இறங்குகலமெடுத்த வணங்காமுடி முத்து தொண்டைமானர் ஆவர். அத்திருப்பணிக்குறை முடித்த காலம் பிங்கள வருடம் ஆனிமாதம் 20 ஆம் தேதி ஆகும்.

### மாணிக்கவாசகர் மூலஸ்தானம்

இத்திருக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தில் 16 ஆம் பட்டத்தில் வீற்றிருந்தருளிய மகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் கட்டளைப்படி கட்டப் பெற்றதாகும். கும்பாபிடேகம் செய்யப் பெற்ற காலம் கலியுகம் 4980ல் செல்லாகிய பகுதானிய வருடமாகும்.

### முதற்பிரகாரத்தின் திருப்பணிகள்

திருவாவடுதுறை ஆதீனத்தில் பதினேழாவது மகாசந்நிதானமாக வீற்றிருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகமூர்த்திகள் கட்டளைப்படி முதற்பிரகாரத்திற்கு உட்பட்ட சிலதிருப்பணிகள் செய்துமுடிக்கப்பெற்றன. அவை முடிவுபெற்றுக் கும்பாபிடேகம் செய்யப்பெற்ற காலம் சாலிவாகன சகாப்தம் 1814 ஆம். அதாவது, கி. பி. 1892.

வடக்கூரில் உள்ள ஆதிகைலாசத்து எழுந்தருளியிருக்கும் இறைவர் குவலய சந்திர ஈஸ்வரமுடைய நாயனர் என்று கோயில் தூணிலுள்ள ஒரு கல்வெட்டினல் அறியக்கிடக்கின்றது.

அவ்வூரிலுள்ள கஜேந்திரப்பெருமாளுக்குச் சோழ பாண்டிய விண்ணகர எம்பெருமானர் என்பதும், அக்கோயில் வாசல்நிலைக்கல் பெருமாள் தேவர்பிரான் உள்ளிட்டார் உபயம் என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.



தலவிருட்சம் - குருந்தமரம்